# நூல் அறிமுகம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : **ஒதுக்கப்பட்ட உயிரினமா நாங்கள்?** |
| நூல் ஆசிரியர் | : விசு அய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2023 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு உதவி | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : 56 |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.60 |

# வாழ்த்துரை

**அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்**
**பெருமை முயற்சி தரும். - திருக்குறள்.**



**B.Rathinasabapathy**
Founder-Nature for Future

எந்த ஒரு செயலையும் செய்யும் பொழுது நம்மால் முடியுமா? என்று மனத்தளர்ச்சி அடையாமல், முடியும் என்ற நம்பிக்கையுடன் முயற்சி செய்தால் அதுவே பெரிய வலிமையாக அமையும்.

அந்த வகையில், “**ஒதுக்கப்பட்ட உயிரினமா நாங்கள்**?” என தலைப்பிட்டு விலங்குகள், தாவரங்களை பாதுகாக்கும் பொருட்டு வந்த புத்தக வெளியீடு முயற்சி பாராட்டத்தக்கது.

பாரபட்சம் மனிதர்களில் மட்டுமில்லாமல் உயிரினங்களிலும் என்பதை ஆசிரியர் நாசூக்காக குறிப்பிட்டுள்ளது அருமை. இதன்மூலம் தவறான மூடநம்பிக்கை உடைந்து, இந்த உயிரினங்களை பாதுகாக்கும் எண்ணம் மக்கள் மனதில் ஓங்கும் என்பதில் ஐயமில்லை.

“எருக்கு”, “கள்ளி” இரண்டும் மிகவும் மருத்துவ குணம் உள்ளவை என்பது அறிவியல் உண்மை. “ஆந்தை”, “ஆமை” உணவுச்சங்கிலியில் பங்கு பாராட்டத்தக்கது. அதை விட்டு, கலியுகத்தில் சகுணம் பார்ப்பதும், ஒதுக்குவதும் முரன்பாடானது என்று கவிதை நடையில் ஆசிரியர் கையாண்டு உணர்த்தி இருக்கிறார்.

பகுத்தறிவு உள்ளவர்கள் பகுத்தறிவு இல்லாததை நம்பித்தான் வாழவேண்டும். இது இயற்கையின் நியதி. ஒவ்வொரு உயிரினமும் ஒரு நோக்கத்துடன் படைக்கப்பட்டுள்ளது. இதை மாற்ற இனி எவராலும் முடியாது. 'புதியதோர் உலகம் செய்வோம்' என்பது கற்பனை உலகத்தில் முடியும். ஆனால், நிஜ வாழ்க்கையில் அப்படி உருவாக்குவது மிக கடினம் அல்லது சாத்தியமில்லை. ஆக்குவது கடினம் அழித்தல் சுலபம்.

இத் தொகுப்பு மிகவும் எளியமுறையில் இனிய தமிழில், புரியும் நடையில், மனதில் பதியும் படி அமைத்து தந்துள்ளது பாராட்டத் தக்கது. மாற்று சிந்தனைகளை ஒருகணம் யோசிக்க வைக்கும் இந்நூல், மேலும் பல நூல்களை எழுதும் முயற்சியில் தொடரவேண்டும் என நூல் ஆசிரியரை வாழ்த்தி வணங்குகிறேன்.

**உங்கள்**

இரத்தினசபாபதி

brspathy@gmail.com

# என்னுரை

அறியாமை என்பது அனைத்து பிரிவினரிடமும் இருக்க தான் செய்கிறது. இன்று புதிதாய் பிறந்தோம் என்று பாரதி சொல்வது போல இன்று புதியதாய் கற்றுக் கொண்டோம் என சொல்ல எத்தனை பேருக்கு தைரியம் வரும் சொல்லுங்கள்.

நாம் எந்த துறையில் நிபுணத்துவம் பெற்று இருக்கிறோமோ, அந்த துறையிலேயே தெரியாதன என சில இருக்கத்தான் செய்யும். இது தவறும் அல்ல சரியும் அல்ல. தெரியாதனவற்றை தெரிந்து கொள்வதும் தெரிந்தவற்றை எடுத்து சொல்வதுமே முதிர்ச்சி நிலையின் முதற்படி.

அறியாமை என்பது இருள். அறிவு பெறுதல் என்பது ஒளி என்ற தத்துவப் படி அறியாமையில் இருந்து அறிவு நிலைக்கு செல்வதே வளர்ச்சி. இந்த அறியாமை எல்லா நிலையிலும் இருக்கும் என்பதால் தான் ஔவையார் கற்றது கை மண் அளவு என்று சொல்லி இருக்கிறார்.

இந்த படி நிலையில் சில அடிப்படை சிந்தனைகளை அடுக்கி வைத்து நாம் தெரியாதனவை என இருப்பதை சிந்திக்க பெரும்பான்மையான மக்களால் ஒதுக்கப்பட்டு வரும், “**எருக்கு**”, “**கள்ளி**”, “**ஆந்தை**” மற்றும் “**ஆமை**” இவைகளை வைத்து தொகுத்து புதுக் கவிதை வடிவில் இவற்றின் positive அம்சங்களை பட்டியலிட்டு நூலாக்கி உங்களுக்கு படைக்கிறோம்.

அறிவியலிலோ, உயிரியலிலோ அடிப்படையில் பட்டம் பெறாதவன் நான், எனினும், மக்கள் மத்தியில் இவைகள் ஒதுக்கப்பட்டு இருக்கலாமா? என்ற எண்ணத்தை, எனது நண்பர் கோவையை சேர்ந்த சூழலியல் நிபுணர், பழக்கப்படா உயிரியலில் முதுகலை பட்டம் பெற்ற திரு.இரத்தினசபாதி அவர்களிடம் அடிக்கடி பகிர்ந்து கொள்வது உண்டு.

அவர் தந்த ஊக்கமும், அந்த எண்ணத்தின் தாக்கமுமே, இன்று உங்கள் கையில் “**ஒதுக்கப்பட்ட உயிரினமா நாங்கள்**?” என்ற புத்தகம். வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் நல்லதை சொல்லவேண்டும் எப்போதும் நல்லதையே சிந்திக்க வேண்டும்.

இது போல இன்னும் சில உயிரினங்கள் மூட நம்பிக்கையாலோ, அல்லது அறியாமையாலோ, ஒதுக்கபட்டு இருக்கின்றன எனினும் இந்த வரிசையில் இந்த புத்தகத்தில், எருக்கு, ஆந்தை, கள்ளி, ஆமை என்ற இந்த நான்கு மட்டும் கையாள பட்டு இருக்கிறது. இவைகளை நாம் போற்றி காக்க வேண்டும் என்ற வேண்டுகோளை அன்புடன் செய்து வைக்கிறேன்.

இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த மணிபதிப்பகத்தாருக்கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த nature for future என்ற அமைப்பின் தலைவர், சூழலியல் நிபுணர். திரு.இரத்தினசபாபதி அவர்களுக்கு மனம் நெகிழ்ந்த நன்றியை பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு ,மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்துவது போல இந்த உயிரினங்கள், ஒதுக்க்கப்ப்ட்டவை அல்ல என மக்கள் மத்தியில் பரப்ப வேண்டும். இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும். channel G என்ற podcastல் ஆடியோவாகவும் கேட்டு பயன்பெறலாம்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# பதிப்புரை

இது கவிதை புத்தகமா? அறிவியல் புத்தகமா? என ஒரு நிமிடம் சிந்திக்க வைத்தது. வழக்கம் போல நூல் ஆசிரியரின் வித்தியாசமான சிந்தனைகளை விவரம் பொதிந்த தகவல்களுடன் ஒதுக்கப்பட்ட உயிரினங்கள் இல்லை அவை போற்றி காக்க வேண்டும் என்ற குறிப்பை உணர்த்தும் விதமாக புது கவிதை நடையில் எளிமையாக மனதில் பதிக்கும் படி எழுதி தந்து இருப்பது மகிழ்ச்சியை தருகிறது.

நூல் ஆசிரியர் தம் திறமையும் படைப்பு திறனும் ஒவ்வொரு பதிப்பிலும் பதிப்பாசிரியராக நாங்கள், பார்த்து வியந்து இருக்கிறோம். அந்த வரிசையில், இது மேலும் ஒன்று. அவர் தம் எண்ணங்களிலும் சரி, செயல்களிலும் சரி, தனக்கு என தனி முத்திரை கொண்டு, தனி ஒருவனாக, தன்னை முன் நிறுத்தி காட்டும் வல்லவர். இந்த இருபதாம் நூற்றான்டில், இப்படி கூட ஒருவரா என்று நாங்கள் வியப்பில் ஆழ்ந்தது உண்டு.

இந்த பெருமகனாரின் எண்ணங்களையும் சிந்தனைகளையும் நூலக பதிப்பித்து படைத்து தருவதில் பேரின்பம் அடைகிறோம்.

தொடர்ந்து வரும் அவரது நூல்களை தொய்வில்லாமல் தரும் சிந்தனைகளை அன்பர்கள் படித்து பயன் பெற வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த நூல்களை படித்து பயன் பெறுவது ஒன்றே நூல் ஆசிரியருக்கு நாம் தரும் ஊக்க மருந்து எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் அறிவை பகிரும் இந்த நூல் ஆசிரியர் தம் எண்ணங்களுக்கு பலம் சேர்ப்போம் பயன் பெறுவோம்.

- பதிப்பாளர்

கள்ளி என சொன்னால்
துள்ளி வருகிறது சிந்தனை

அள்ளி தர தமிழும்
கிள்ளி தர கவிதையும்

பள்ளிக்கு போகாமலே
கள்ளியை பாட வைக்கிறது.

# கள்ளியே எனக்கு உத்வேகம்

கல்லை கொண்டு
கட்டிடம் கட்டும் இன்ஜினியரைப்போல

முள்ளை கொண்டு வடிவமைப்பு தரும் கள்ளி
முதலில் எந்த கல்லூரியில் படித்தது..?

மேக்கப் போட்டால்
மேனி அழகு சில மணி நேரத்தில் கலைந்து விடுகிறதே

மேக்கப் இல்லாமல் தன் பசுமை அழகை
மேலும் பல வருடங்கள் வைத்திருக்கும் கள்ளி

எந்த சென்டருக்கு போய் வந்தது?
எப்போது தான் போய் வந்தது?

நீர் ஊற்றி வளர்த்த மரமெல்லாம்.
நீரின்றி வாடி விடுகிறதே.

நீரின்றி வளர்ந்த இந்த கள்ளி
யார் துணையும் இன்றி ஆண்டுகள் கடந்தும் வாழ்கிறதே!

சார்ந்து வாழும் மனித இனமே - சுய
சார்பாக பிறர் உதவியின்றி(**self dependent**) வாழ்கிற

கள்ளியிடம் நாம்
கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் இது..

ஏமாறாமல்
ஏளன படாமல்

ஆண்டு தோறும் வளரும்
ஆற்ற மிக்க கள்ளியே

உத்வேகம்(**inspiration**) தரும் மருந்து எனக்கு மட்டுமல்ல உங்களுக்கும் கூட..

# கள்ளிக்கு எத்தனை பள்ளி...!!

குன்றிருக்கும் இடம் எல்லாம்
குமரன் இருக்குமிடம் என்பது தமிழ் கிழவியின் கூற்று.

ஆண்டு தோறும் கொங்கு மண்டலத்தில்
ஆறு மலை ஏறி குமரனை தரிசனம் செய்வது

பதினைந்து ஆண்டுகளாக எனக்கு
பழக்கம். அந்த வகையில் இந்தாண்டு..!!

ஒதிமலை தொடங்கி,
நாகமலை வரை

நாளுக்கு ஒரு மலை என ஏறி
நம்மை வாழ்விக்க வந்த கந்தகடவுளை

கண்டு அகம் மகிழ்ந்தேன்.
கந்தனை காண சென்ற குன்றெல்லாம்.

கள்ளி மரத்தை கண்டு வந்தேன்.
கள்ளி படத்தை அண்மையில்

சபாபதியின் சாரல் என்ற
புத்தகத்திற்கு அணிந்துரை எழுதுகையில் பார்த்தேன்.

அந்த தாக்கமா
இந்த கள்ளி என சொல்வது போல, .

கண்ட மலை எல்லாம்
கள்ளியை தான் கண்டேன்.

இத்தனை ஆண்டுகள்
இந்த மலை ஏறி வந்த போதும்,

பல நூறு ஆண்டுகளாக இங்கேயே
பல தவம் இயற்றும் இந்த கள்ளி...

இந்த ஆண்டு பார்வையில் பட்டதே
இது தான் ஆச்சரியம் என

வடித்து விட்டேன்- தமிழ்
வரியாக வளமாக வந்த சிந்தனையில்.

பல்லுயிர் பாதுகாப்பில்
கள்ளிமட்டும் என்ன விதிவிலக்கா...

இவைகளையும் கருத்தில் கொள்ள வேண்டுமே என
இதை கோவை தோழர் சபாபதியிடம் சொல்லி வந்தேன்.

கள்ளியை - நாமும்
கண்டு கொள்ளாமல் இருக்க முடியுமா?

இந்த கருத்தை மனதில் சுமந்து
இந்த கள்ளியை நெஞ்சில் சுமந்து..

நெஞ்சம் மகிழ
கொஞ்சம் இளைப்பாறுகிறேன்..

# எங்கள் தோட்டத்தில் கள்ளி

மக்கள் எள்ளி நகையாடும் அடி
கள்ளியே...!

நீயும் வந்தாயா எங்கள் தோட்டத்தில்.
நின் வாழ்வு தொடர.-  உன்னை ஒதுக்க

நாங்கள் ஒரு போதும்
நினைத்தது இல்லை.

முள் சுமந்த கிரீடம் என்றதும்
முதலில் வரும் ஏசுநாதரை போல

உடம்பெல்லாம் முள்ளாகி
உன் பசுமை அழகைகாட்டும்

கள்ளியே.. கொஞ்சம்
தள்ளியே நின்று ரசிக்கிறோம்.

கள்ளி மீது இத்தனை காதலா.. இவள்
கள்ளி என்பதால் காதலா

என தோழர்கள் வியக்கும்
எனக்குள் எத்தனை சிந்தனை

இந்த கள்ளி
இனி

எங்கள் தோட்டத்தை அலங்கரிக்கும்
உங்களுக்கு காட்சி பொருளாக அமையும்

# ஒதுக்கப்பட்ட ரத்தினமா?

“வைரம்” ஒதுக்கப்பட்ட ரத்தினமா?
வையத்தில் அப்படி ஒன்றும் இல்லையே

கரி
கணிந்து பக்குவப்பட்டு

கண்டெடுக்க
காலம் சில ஆகும்

காத்திருக்கும் காலம்
கட்டாயம் அதன் மதிப்பை கூட்டும்

காதலை சொன்ன பிறகு
காதலர்கள் காத்திருக்கும்

ஒவ்வொரு நொடியும்
ஒரு யுகமாகும்.

அந்த காதல்
அருமைமிகு மதிப்பு மிக்கது.

விரைவில். என
விளம்பரம் வந்து - டீசர் மட்டும் வந்தால்,

அந்த படத்தின்
அதிகமான கூடுதல் மதிப்புடன் இருக்கும்.

ஆக
காத்திருந்து பெறும்

எதுவும்
எப்போதும் விலை கூடுதலாகவே இருக்கும்.

கள்ளி மட்டும் என்னவாம்
காத்திருந்தால் தான்

வளர்ச்சியும்
வடிவமைப்பும் வெளிப்படும்

ஒரு இன்ச் வளர
ஓர் ஆண்டு ஆகும்.

தீண்டாமை என்பது
துளியும் இல்லை

ஒதுக்கப்பட்ட
உயிரினம் கள்ளி இல்லை

கொஞ்சம் நில் தள்ளி
என் பெயர் கள்ளி

என
ஒவ்வொரு கள்ளியும்
ஒய்யார அழகுடன்

உட்கார்ந்து இருக்கும் கள்ளி அழகே
உனக்கு தான் உயரமான இடம்

எங்கள் மனத்திலும்
எப்போதும் பணத்திலும்.

# கள்ளியா...? கன்னியா..?

கள்ளி...
அல்ல.. அல்ல..
கன்னி..

கன்னி என அழைக்க வேண்டிய என்னை
கள்ளி என்று அழைப்பது ஏன்?

கன்னியாக இருந்தாலும்
களங்கப்படாமல் இருக்கிறேனே...

மகரந்த சேர்க்கையால் நான்
மலர்வதில்லை..

என்னிடம் முள் இருப்பதால்
என்னை பலாத்காரம் செய்பவர்களை

குத்தாமல் விட்டதில்லை.
குத்து வாங்கியவர்கள் என் பக்கம் திரும்பியதும் இல்லை.

காம களியாட்டம் என்னிடம் இல்லை.
காதலை மற்றவரிடம் சொல்வதும் இல்லை.

தனிமையில் ஒருமையில்
நீர் வெளிச்சம் என எந்த தேவையும் இல்லாமல்

துறவி போல ஒழுக்கத்தில் உயர்வாக
துணிவாக அழிக்க நினைபவரை எதிராக - என

வீரத்தையும் வெறுப்பையும்
விவரமில்லாமல் வைத்து இருப்பதில்லை.

மண் வளம் காப்பதற்கு
மனதில்  தியானம் செய்கிறேன்.

எனக்கென ஒரு உலகம்
என்னை ரசிக்கும் ஒரு கூட்டம்.. என

தனிமையில் இனிமையுடன்
தனித்தன்மையுடன்

வாழ்கிறேன்
வளர்கிறேன்..

# கள்ளியை வளர்ப்போம்.

பசுமை என்றால்
பரிதவிக்கும் மனம் கூட அமைதி பெறும்.

பல ஆண்டுகள் வாழ்வதால்
பச்சை தங்கம் என்பது - மூங்கிலாம்.

மூங்கில் கூட வாடிவிடும்
முயற்சி கொண்டு வந்த

கள்ளி இனம்,
கடுகளவும் பசுமை மாறா திருக்கும்.

தெரியுமா உங்களுக்கு?

மூங்கில் மட்டும் அல்ல,
முள் சுமந்த கள்ளியும்

புல் இனம் தான்.
நில். கவனித்து பார்.

சுள்ளிக்கு உதவும்
மூங்கிலைப் போல.

கள்ளியால் என்ன பயன்?
என கேட்கிறீர்கள் புரிகிறது.

மனிதனுக்கு மருந்தாக ..
மலர்ந்து வந்த பூ அழகாக..

பழம் உணவாக..
பழங்காலந் தொட்டு

ஜோதிடத்தில்
சுடராக..
விவசாய காட்டில்
வேலியாக..

ஜெல், பூச்சி கொள்ளியாக..
சொல்! - இன்னும் என்ன வேண்டும்?

என முன் வரிசையில்,
எனக்கு முன் நிற்கும்

கள்ளியை,
பள்ளி பாடத்தில்

சேர்க்க வேண்டும்.
சோர்வின்றி அனைவரும்

கட்டாயம்
கள்ளியை வளர்க்க வேண்டும்

# காதல் சின்னம் - கள்ளி

அல்லிக்கு
அருகதை இருந்தும்

மல்லிக்கு
மனமிருந்தும்.. - காதல் என்றதும்

முள் சுமந்த ரோஜாவே
முன் நிற்கிறது..

தட்டினால் சில மணியில்
தன் இதழ் உதிர்த்து விடும் ரோஜா.

முள் சுமந்த கள்ளியும் பூக்கும்
முழுவதுமே நீடித்து இருக்கும்.

காதல் என்றால் நீடித்த உறவு வேண்டாமா
கள்ளி அல்லவா
காதலுக்கு உதரணமாக வேண்டும்.

எதிர்ப்புகளை கடந்து
எதிர்பார்ப்பை சுமந்து

உறவுகளை மறவாமல் நினைந்து - புதிய
வரவுகளை எண்ணியே மகிழ்ந்து

என வாழ்க்கை அமைவது போல..

கள்ளியிடம் அத்தனையும் இருப்பதால் இனி
கள்ளியே காதல் சின்னமாகட்டும்

# கள்ளியா? திருடியா?

கள்ளி..!!

எனது பெயர் கள்ளியாம்..
கள்ளி என்றால் “திருடி”
என தமிழ் சொல்கிறது.

ஆம்..

நான் திருடி தான்..
மாசுக்களை திருடி

மக்களை வாழ வைக்கும் நான்
கள்ளி இல்லை திருடி தான்

கற்பாறைகளை கனிய வைத்து
மண்ணாக மாற்றி தருவதில்
என்னை விட

இன்னொருவர் இல்லை
இவ்வுலகில்.

அகிலம்

இது இந்த உலகுக்கு
தமிழ் தந்த பெயர்.

இந்த உலகம் தோன்றுவதற்கு முன்பே
இங்கே என் குடும்பம் தழைத்து வந்துள்ளது.

ஒரு
அறிவியல் உண்மையை சொல்லவா?

இவ்வுலகில் மண் பிறந்து
410 மில்லியன் வருடங்கள் ஆனதாம்.

இதில்

வேர் விடும் தாவரங்கள் தோன்றி
375 மில்லியன் ஆண்டுகள் ஆனதாம்.

மனிதன் தோன்றி
2 மில்லியன் வருடங்கள் தான் ஆனதாம்.

ஆனால்

இந்த அகிலத்தில்
இங்கே நான் தோன்றி

35 மில்லியன் வருடங்கள் ஆனது
என்றால் வியப்பாக இருக்கிறதா?

கல்தோன்றி மண் தோன்றா காலத்தே வாளொடு
முன் தோன்றி மூத்த குடி என

புறப்பொருள் வெண்பா நமக்குக்
புகட்டுகிறது.

கொஞ்சம் பொறுங்கள்..

இதற்குக் முன்பே
கள்ளி இனம் இங்கே கடை விரித்து இருக்கிறது

பாறைகளுக்குக் நடுவே
பார்த்து மகிழும் கள்ளி இனம் இருந்தது என

அகநானூறு
அகம் மகிழ்ந்து சொல்கிறது

பாறைகளை மண்ணாக மாற்றுவதில் - இந்த
பாரில் என்னை தவிர இயற்கையாக எதுவும் இல்லை.

பாறைகளின் நடுவே
பல் காட்டும் கள்ளி என

தமிழ் கிழவி இந்த
தரணியில் பாடி வைத்து இருக்கிறார்.

வல்லினத்தை கொண்ட நான்
புல் இனத்தை சேர்ந்தவள்

நான் கள்ளி தான்..
மரமாக வளர்வதில்லை..

ஏன் தெரியுமா?

நன்றி கெட்ட மனிதன் - என்னை
வெட்டி சாய்த்து விடுவான் என்ற பயம் தான்.

கிட்டே வராதே
குத்தி விடுவேன் என்று எனக்கு

முள்ளை கொடுத்து இருக்கிறான்; மனிதன் வணங்கும்
முதல் தெய்வம்.

உயரமான கட்டிடங்களை
ஒரு சில நாட்களில் கட்டிட முடியாது.

தனி ஒருவன் என கட்டிட கலை அமைப்பில்
தரணி வியப்பது எனது கலைநயம்  தான்.

ஓர் ஆண்டுக்கு
ஒன்றரை அங்குலம் தான் வளர்க்கிறேன்.

எட்டடி உயரம் வளர
எட்டி பிடிக்கும் எனக்கு 25 வருடங்கள்.

நீங்கள் கொஞ்சம் செவி  கொடுங்கள்.
நீர் வேண்டாம் என்

உழைப்புக்கு
ஊதியம் வேண்டாம்.

மண் வேண்டாம்;
மக்கள் துணை வேண்டாம்.

பறவைகள் விலங்குகள் தின்று விடுமே என
பாதுகாப்பு கூட வேண்டாம்.

ஒரு ஓரத்தில் என்னை உட்கார விடுங்கள்.
உங்களுக்கு மட்டுமல்ல

இந்த உலகிற்கே நான் உதவியாக
இருப்பேன்.

அன்புடன்..
வில்லி அல்ல.. நான்
கள்ளி.

# கள்ளியை வளர்த்து எடுப்போம்

மேனி அழகை காட்டுவது தான்
மேலை நாட்டினர்க்கும் நாகரீகம்!

பசுமை மேனியை
பாரெல்லாம் காட்டும்

கள்ளி
காதலுக்கோ
கட்டழகு மேனிக்கோ உதாரணமாக சொல்வதில்லை.

சொல்லில் முள் வைத்து
சொன்னால் சொல்பவரை ஒதுக்கி வைப்பார்கள்.

முள் சுமந்த மேனியில்
முழுவதுமே பசுமை இருந்தும்

முள் இருப்பதால் கள்ளிக்கு இல்லை
முதல் வரிசை.

அமைப்பில் ஒரு முள் அல்ல
தொகுப்பில் ஐந்து முட்கள் கொண்டது கள்ளி

ஐந்தெழுத்து மந்திரம் போல
ஐம்புலன் அடக்கம் போல

ஐந்து செண்டிமீட்டர் இடைவெளியில்
ஐந்து முள் தொகுப்பு

கள்ளி மேனியில்
காட்சிகளாக இருக்கும்..

நாகதாளி இதன் பெயர் என
நாங்கள் அழைப்போம்

பல் கூர்மையாக
பாம்புக்கு இருக்கும்

முள் கூர்மையாக
முள் சுமந்த கள்ளிக்கும் இருக்கும்

பாம்பு
சிலருக்கு குல தெய்வம்
கள்ளி மனிதகுலத்திற்கே தெய்வம்.

செடி என்றால் ஊட்டச்சத்து என
பணம் செலவழித்து தருபவர்களே ..

கொஞ்சம் கேளுங்கள்!

கள்ளிக்கு உணவு எது தெரியுமா?

களி மண் உருண்டைகளும் கொஞ்சம்
கற்களும் தான் .!

வாரத்திற்கு ஒரு முறை, தான்
வளர தண்ணீர் ஊற்றினால் போதும்

உங்கள் வாழ் நாள் முழுவதும்
உங்களுடன் வாழும்

கள்ளியை வாழ வைப்போம்
கள்ளியை வளர்த்து எடுப்போம்

# முள்ளுடன் கள்ளி

கல்லை உண்டு வாழும் நான்
கள்ளி  தான் திருடி அல்ல

இயற்கையை திருடும்
இந்த சுயநல மனிதனை போல

திருடி அல்ல. மக்களை
திருத்த வேண்டுமென

முள்ளுடன் வளர்கிறேன்.
முன் ஜாக்கிரதையாக இருக்கிறேன்.

இந்திய மக்கள் தொகையை போல
இங்கே என் குடும்பம் பெரியது.

எண்ணிச் சொல்ல முடியாதபடி
எண்ணிக்கையில் அதிகம்.

ஒவ்வொன்றும் ஒரு விதம்
ஒன்றாக சொன்னால் கள்ளி இனம்

கவர்ச்சி பொருளாக இருந்தாலும்,
கல்லை உண்டு வாழ்வதால் நான்

கள்ளி. உங்கள் அன்பு
வள்ளி.

# திருக்குறளில் கள்ளி

திருக்குறளில் இருக்கிறது
தினமும் போற்றும் கள்ளி

இது
இது தான் என தெரியாமல் தேடினேன்.

இப்போ அதை கண்டு கொண்டேன்.
இதோ இந்த குறளில்.

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்."

நெருஞ்சி பழம் என்பது என்ன?
நாகசாமி பழம் தான் அது.

தமிழறிஞர்கள்
தரமான சிந்தனைக்கு இதை கொண்டு விளக்கலாம்.

உலக புகழ்பெற்ற வின்ஸலோ அகராதி கூட உள்ளடியே
நெருஞ்சிக்கு பொருள் சொல்லும் போது

இது ஒரு

முள் சுமந்த
புல் இனம் என சொல்கிறது

ஆனால் நெருஞ்சி பழம்

என ஒன்று இல்லை
என தாவரவியல் சொல்கிறது.

அதே தாவரவியல்

கள்ளியை புல் இனம் என்றும்
கள்ளியில் பழம் வரும் என்றும் சொல்கிறது.

ஆக

கள்ளியை தான்
கள்ளி பழம் நெருஞ்சி பழம் என வள்ளுவம் சொல்கிறதோ

நிலவை பாடத
கவிஞன் இல்லை

நிலவை படாதவன்
கவிஞனும் இல்லை

என்பது போல

இனி

கண்ணை கவரும்
கள்ளியையும் சேர்க்கலாம்.

# ஒதுக்கப்பட்ட உயிரினமா ஆமை..!!

ஒதுக்கப்பட்ட
உயிரினமா ஆமை..!!

விலை பேசி
விற்பது தவறு என்று அரசு சொல்கிறது

அரிய வகை ஆமை என
அலட்சிய படுத்துபவர்கள் இங்கே.

ஆமை வந்த வீடும்
அமீனா வந்த வீடும்

என

தவறாக சித்தரித்து
தரணியில் பரப்பி விட்டார்கள்.

உருப்படாது ஆமை என்றால்
உலகில் விலை போவது ஏன்?

நீதி மன்ற வழக்கு, உத்திரவு, மேல்முறையீடு என
நீண்ட நாள் எடுத்துக் கொள்ளும் என்பதை சொல்ல

ஆமையின் வேகத்தை இங்கே சுட்டிக் காட்ட, சொன்ன
ஆமையை நம்மவர்கள் அமீனாவுடன் சேர்த்து விட்டார்கள்.

வைணவர் வணங்கும் விஷ்ணு
வையத்தில் எடுத்த இரண்டாவது அவதாரம் ஆமை.(கூர்ம)

திருமால் நிகழ்த்திய திருஅவதாரங்கள்
தீயவர்களை அழிக்க தான். ஆனால்,

கூர்ம (ஆமை) அவதாரத்தில் அவர் யாரையும்
கூர் செய்து காட்டவில்லை. மாறாக

அமிர்தம் கிடைக்க
அருள்பாலித்தார்.

அமிர்தம் மட்டுமல்ல,
ஆரோக்கியம் தரும் தன்வந்தரி,

அஷ்ட ஐஸ்வர்யம் தரும் இலக்குமி
அனைத்தையும் தரும் காமதேனு என

பாற்கடலை கடைந்த போது வந்தது என
புராணம் சொல்கிறது.

ஆமையால் அதிர்ஷடம்
அமிர்தம் போல இன்பம் வரும் என புரிகிறதா?

ஆனி மாதம் தேய்பிறை துவாதசியில்
ஆமை அவதராம் தோன்றியதால்

கூர்ம ஜெயந்தி என
கூர் நிறைந்த இந்துக்கள் கொண்டாடுகின்றனர்.

காஞ்சியில் உள்ள நம்ம
கச்சபேஸ்வரர் (கச்சபம்-ஆமை) ஆலயம்

ஆமை அவதாரம் செய்த பெருமாள்
அந்த வைகுந்த பதவி பெற்றதை சொல்லும்.

ஆயிரமாண்டுகள் பழமை வாய்ந்த இந்த
ஆலயம் காஞ்சியில் உள்ளது போல,

சிங்கார சென்னையில் உள்ள
சிவன் கோயில் கச்சாலீஸ்வரர் கோயில்

பாலாற்றில் வெள்ளம் வந்து - தன்
பாரத்தை சிவனிடம் பிரார்த்தனை செய்து - என

கச்சபேஸ்வரர் கோயிலுக்கும்
கச்சாலீஸ்வரர் கோயிலுக்கும் தொடர்பு உண்டு

ஆமையின் ஓட்டை சிவனார் புலி
ஆடைக்கு மேல் மாலையாக போட்டு இருப்பது

நம்மில் எத்தனை பேருக்கு தெரியும். இது
நலம் பயக்கும் செய்தி என்பதாவது தெரியுமா?

கூர்ம அவதாரத்தை வழிபட்டால்,
மன தைரியம் வரும் என்று சொல்லுவார்கள்.

வாசலின் வடக்கு பகுதியில் ஆமை வைத்தலென்பது
வாஸ்து சாஸ்திரத்தில் சொல்லும் ஒரு செய்தி.

ஐந்தையும் அடைக்கும் ஆமை நீண்ட நாட்கள் வாழும் - பொறி
ஐந்தையும் அடிக்கினால், மனிதன் ஆனந்த வாழ்வு பெறுவான்

இத்தனை சிறப்பு பெற்ற ஆமையை
இங்கே வெறுத்து ஒதுக்கலாமா?

கொஞ்சம் கூட கோபம் கொள்ளாத ஒரே உயிரினம்
கொஞ்சி விளையாட ஓடி வரும் செல்ல பிராணி - ஆமை.

வணங்குதற்குரிய உயிரினம் அது
வாழ போற்றி காக்க வேண்டிய உயிரினம் என

புரிந்து கொண்டு இந்த
புவியில் அதனையும் வாழ வைப்போம்.

# அவசரமில்லை - ஆமை

அவசர உலகில் ..
அனைவரும்..

நிற்க எனக்கு நேரமில்லை
நெடுந்தூரம் போக வேண்டும் என

ஓடிக்கொண்டு இருக்கிறார்கள்
ஓய்வாக உட்கார்ந்து விடுகிறார்கள்.

சமூக வலைதளத்தில்..
சம்பந்தமே இல்லாமல்

கமென்ட் தருவதை
கட்டாய வழக்கமாக கொண்டாடுகின்றனர்.

ஒரு நிமிடம் இருங்கள் .
ஒங்களுக்கு ஒரு விஷயம்..

நீண்ட நாள் வாழ வேண்டுமா?
நீடித்த புகழ் வேண்டுமா?

உலகில் உங்கள் விலை
உயரமான இடத்தில் இருக்க வேண்டுமா

அப்படி என்றால்.
ஆமையை பாருங்கள்..

சத்தம் போடாத ஆமை
சட்டென ஓடாது..

கடலில் இருக்கும் போதும்
கடற்கரை மணலில் உலவும் போதும்

அமைதியாக, மெதுவாக
ஆனந்தமாக, உலகில்

நீண்ட நாள் வாழும் உயிரினம்
நிச்சயமாக "ஆமை" மட்டும் தான்.

விலையும் அதிகம்
விவரமானவர்களுக்கு தெரியும்-இதில்

சுவையும் அதிகம்
சத்தும் உள்ளது

அமெரிக்க அதிபர் வில்லியம் டாஃபெட் உணவு தட்டிலும்
ஆமைக்கறி இருந்து இருக்கிறது.

நீங்கள்
நீண்ட நாள் வாழ வேண்டுமா?

பேசாத ஆமையை பாருங்கள்
பேச்சை குறையுங்கள்.

மௌனம் ஞானத்தின் அடையாளம் என்கிறது
மெத்த படித்த வேத நூல்கள்.

நீண்ட நாள் வெற்றியை தக்கவைத்துக் கொள்ள வேண்டுமா?
நீந்தும் ஆமையை பாருங்கள்.

செயலில் மெதுவாக
சிந்தனையில் வலுவாக

வெற்றி இலக்கை மட்டும்
வெறியாக கொண்டால்

வெற்றி நிச்சயம் - இது
வேத சத்தியம்.

அன்பை மட்டும்
அடித்தளமாக கொண்ட ஆமை

கொஞ்சம் கூட கோபம் கொள்ளாமல்
கொஞ்சி விளையாட ஓடி வரும் செல்லப் பிராணி.

அன்பை மட்டும் மனதில் விதைத்து
ஆளையே கொல்லும் கோபத்தை விடுத்தால்

அகிலம் போற்றும் வாழ்வை
ஆனந்தமாக பெறலாம்

இருக்கும் போதும்.
இறந்த பிறகும்...

ஆமை கற்றுத் தரும் பாடம் இது
"ஆமாம்" என்று சொல்ல வேண்டாமா.

ஆமையை காப்போம்
நன்மையே விளையும்.

## ஆ....ஆந்தை

ஆ.... ஆந்தையா... என
அத்துணை பேரும் விழிக்கிறார்கள்.

இரவில் விழித்து
பகலில் தூங்கும்
ஐடி மக்களை போல நானும்

இரவில் விழித்து
பகலில் தான் தூங்குகிறேன்.

உங்கள் குடும்பத்திற்கு அவர்கள் உதவுகிறார்கள்.
விவசாயிகளுக்கு நான் உதவுகிறேன்.

மனிதர்களை விட ஒழுக்கத்தில் சிறந்தவன் நான்.
ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் எனக்கு இல்லை.

குழந்தை வளர்ப்பில் என்னை மிஞ்ச
இவ்வுலகில் எந்த உயிரும் இல்லை.

காட்டில் இருப்பவன் ஈசன் அவனைப்போலவே
கண்கள் எனக்கும் உண்டு மூன்று.

காட்டில் நான் இருந்தாலும் ஈசனைப்போல
முக்கண் இருந்தாலும் என்னை ஒதுக்கி வைப்பதேன்.

நான் இல்லாமல் பஞ்ச பட்சி சோதிடத்தில்
சோதிடம் இல்லை- தெரியுமா உங்களுக்கு?

உயிரில்லா பொறியை வைத்து எலி பிடிக்கும் விவசாயிகளே.
உயிருள்ள எனக்கு கூடு கட்டி தந்தால்,

எலியை மட்டும் பிடித்து
எல்லோரையும் வாழ வைப்பேனே.

எனக்குள் இருக்கும்
என்னை கொஞ்சம் பாருங்கள்.

பறப்பதிலும் மெதுவாக அமைதியாக இருக்கிறேன்.
தேவையில்லாமல் கத்துவதில்லை.

எனது குரலில் பல பொருள் இருக்கும் அதை
கவனித்தால் மட்டுமே உண்மை புரியும்.

அப சகுனம் நானில்லை. வரும் முன் உரைக்கும்
அந்த சோதிடனை போல தான் நானும்.

வௌவால் எனக்கு தீனி
அவர்களுக்கு அதுவே போனி

அதனால் சீனாவில் எனக்கு
அந்த நல்ல பெயர் இல்லை.

அதிர்ஷ்ட தேவதை யார் என
அமேசானில் தேடினால்..

அங்கே முதலில் வந்து நிற்பது
ஆந்தை பொம்மை தான்.

இந்து மத பஞ்சாங்கத்தில்
இடம் பிடித்த நான்...

இந்தியர்கள் மனதில் இன்னும்
இடம் பிடிக்கவில்லை.

திருமுறைகளிலும்
திருப்புகழிலும்

இடம் பிடித்த நான் மக்கள் மனங்களில்
இன்னும் இடம் பிடிக்கவில்லை.

பஞ்ச தந்திர கதையில்
படம் பிடித்த என்னை.

பாவம் என பரிதாபபடாமல்
பிடித்து அடித்து விடுகிறார்கள்.

இந்தியாவில் என்ன பாவம் செய்தேன்
இங்கே ஏன் என்னை ஒதுக்குகிறார்கள்? புரியவில்லை

மனிதர்கள் இருக்கும் இடம் வேண்டாம் என
மரங்கள் இருக்குமிடத்தில் இருக்கும் நான்

உங்கள் நண்பன் என
உணர்ந்து கொள்ளுங்கள்.

என்றும் உங்களுடன்.
ஆந்தை.

# வெள்ளை ஆந்தை

ஆந்தையை தேடி
ஆய்வு செய்யும்

எண்ணமோ
நேரமோ இல்லை.

எண்ணியர்
திண்ணியராக பெறுவர்

என
வள்ளுவம் சொன்னது போல

நேற்றிரவு
மணி 11.15க்கு

பால்கனியில்
காற்று வாங்கி கொண்டு இருந்தேன்

ஒரு பறவை
வடக்கில் இருந்து தெற்காக
பறந்து வந்தது.

இரவில் என்ன
இந்த பறவை

என
ஒரு நிமிட சிந்தனையில்

பார்வையை அதன்
பக்கம் திரும்பினேன்.

அருகில் உள்ள
உயரமான கம்பியில்
உட்கார்ந்து கொண்டு

கண்களை உருட்டி உருட்டி
கழுத்தை திருப்பியபடி

பார்த்தது
பறந்து வந்த

வெள்ளை ஆந்தை.
வெளிச்சம் இல்லாத

இரவில்
இந்த சென்னை மாநகரில்

சத்தம் போடாமல்
தன் இருப்பை காட்டியது

ஆச்சரியமான
மகிழ்ச்சி தான்

என்றாலும்

ஆந்தை பலன் அறிய
ஆர்வமுடன்

சகுன சாத்திரத்தை
சட்டென புரட்டினேன்

என்ன பலன் வருமோ
என்ற பதட்டம் இருந்தது.

வெள்ளை ஆந்தை
இரவில் தென்படின்

பண வரவு என்று
பலன் வந்தது.

பௌர்ணமியில் கண்டால்
உள்ளுணர்வு மேம்படும்

என
சகுன பலன் வந்தது

ஆந்தையை கண்டது
அது பண வரவை தந்தது

என
இரட்டிப்பு மகிழ்ச்சியில்

தூங்க சென்றேன்
துயர் நீங்கி எழுந்தேன்.

இந்த நாளை
எனது குறிப்பேட்டில்

புக் மார்க் செய்து
பொக்கிஷமாக வைக்கிறேன்

(04-04-2023)

# ஆந்தைக்கு என்ன அத்தனை

மூலிகை வைத்தியத்தில்
ஆந்தையை பிடித்து கஷாயம் வைத்து

என சொல்லி பாடல் வரும்
அது ஆந்தை அல்ல

பேராமுட்டி என்ற மூலிகை தான் அது.
காய்ச்சலை தணிக்கும் பேராமுட்டியை

ஆந்தை என்று சொல்லுவார்கள்.

சங்க இலக்கியத்தில்
பிசிராந்தையார் என புலவர் பெயர் வரும்

அவருக்கும்
ஆந்தைக்கும் தொடர்பு இல்லை

நாற்புறமும் தகவல் சேகரித்து
துப்பறியும் ரிப்போர்டர்களை ஆந்தையார் என்று சொல்லுவார்கள்

270 டிகிரி வரை கழுத்தை திருப்பும் ஆந்தை என்பதால்
ஆந்தைக்கும் அவருக்கும் தொடர்பு இல்லை

இப்படி ஆந்தையை உதாரணம் காட்டும் நம்மவர்கள்
ஆந்தையை உறவில் சேர்ப்பதில்லை.

உதாரனத்திர்காகவாவது காட்டுகிறார்களே என்பதில் பெருமை.
எல்லா உயிர்களையும் வாழ வைப்போம்.

# இன்சொல் இனிது.

ஆந்தை என்றால் அத்தனை ஆபத்தா?
ஆந்தையின் குரலில் அர்த்த்தங்கள் உண்டு

அவை ஆந்தைக்கு மட்டுமல்ல
அனைத்து உயிர்க்கும்

காக்கை குருவி எங்கள் கூட்டம் என்று சொன்ன பாரதி
ஆந்தை சொல்லவில்லை

பஞ்ச தந்திரத்தில் இடம் பிடித்த ஆந்தை
சகுன சாஸ்திரத்தில் சரம் கண்ட ஆந்தை

சோதிட நூலில் தடம் பதித்த ஆந்தை
மக்கள் மனதில் இடம் பிடிக்கவில்லை

குயில் போல குரல் இனிமை இல்லை தான் காரணமாம்
இங்கே இதில் இருந்து தெரிந்து கொள்ளவேண்டியது இது

பாரதியும் இதை தான் சொல்கிறான்
வள்ளுவமும் இன் சொல் இனிது என சொல்கிறது

யாவர்க்குமாம் இன்னுரை என திருமந்திரம் சொல்கிறது

மனிதர்கள் மற்ற உயிர்களிடம் இருந்து கற்க வேண்டிய பாடம் இது
இன்சொல் இனிது.

# பறவை நலம் பேண வேண்டாமா?

காகம் பறந்தால் ஓசை வரும்
ஆந்தை பறந்தால் ஓசை வராது

ஏன்?

ஆந்தை இருளில் திரிவது
மனிதர்களுக்கு தொல்லை தர கூடாது என்று

காகம் இரவில் தூங்கி அதிகாலை எழுவது
மக்களை எழுப்பி விடுவதற்காக

ஆக

பறவைகள் மனித நலனை பேணுகிறதே
மனிதன் பறவை நலம் பேண வேண்டாமா?

# தேவ மூலிகை - எருக்கு

கணபதி வழிபாட்டில்
கடையிலும் விற்கும் பொருள் - “எருக்கு”

ஆண்டவனை வழிபட
அஷ்ட புஷ்பங்களில் ஒன்று - “எருக்கு”

ஆள்மிரட்டி என சொல்லும்
அதிர்ஷ்டம் தரும் மூலிகை - “எருக்கு’

விரோதிகள், எதிர்கள் விலக வேண்டுமா?
விவரமாக கேளுங்கள் ஹோமத்தில் - “எருக்கு” சமித்து.

இலையை எரித்து புகையை நுகர்ந்தால்,
இனி இல்லை ஆஸ்துமா தொல்லை என

மூலிகை மருத்துவம் சொல்கிறது - செடி
முழுவதும் தரும் பால் மூட்டு வலிக்கு மருந்தாம்.

காலில் முள் தைத்தால்,
கண் முன்னே தெரியும் எருக்கை ஒடித்து

அதன் பாலை தடவினால், குத்திய முள் கூட
அப்படியே வந்து விடும் என சொல்வாங்க.

குதிகால் வலிக்கு, செங்கல்லை சுட்டு
கொஞ்சம் பழுத்த இலையை அதன் மீது வைத்து

காலை வைத்து எடுத்தால்,
காணாமல் போயிடும் குதிகால் வலி.

தேவ மூலிகை என போற்றப்படும் வெள்ளெருக்கு
தெய்வாம்சம் நிறைந்த இடத்தில் தான் வளரும்.

புதையல், இரத்தினங்கள் வைத்து இருக்கும் இடத்தில்
புதிதாக முளைக்கும் என விருட்ச சாஸ்திரம் சொல்கிறது

சிறுநீரக கோளாறுகளை ஒரு
சில நாட்களில் குணப்படுத்துமாம் எருக்கம் பூ.

பாம்புக்கு எதிரியாம் எருக்கு.
பரமசிவன் கழுத்தில் இருக்கும் பாம்புக்கு

பிரார்த்தனை மலராக இந்த அஷ்டபுஷ்பமாக
பிரயோகிக்க படுகிறது எருக்கு.

நீர் இல்லாமல் கூட 12 ஆண்டுகள்
நிலத்தில் வாழும் தன்மையது எருக்கு

எருக்கின் மீது வேண்டாம்
வெறுப்பு. அது போற்ற வேண்டிய தேவ மூலிகை

எருக்கு நமக்கு
இருக்கு என அழுத்தமாக சொல்லுங்கள்.

# அஷ்ட புஷ்பங்கள்

அஷ்ட புஷ்பங்கள் தெரியுமா?
அவை - எருக்கு, புன்னை, செண்பகம், பாதிரி, நந்தியாவட்டை, அரளி, நீலோத்பவம், தாமரை

வெள்ளெருக்கு பட்டையை நூலாக
விளக்கு திரிக்கு பயன் படுத்தினர் தமிழர்

வெள்ளெருக்கு வேரில் செய்யலாம்
விநாயகர் வழிபாடு,

வெள்ளெருக்கு வேரில் பூஜைக்கு
மணி மாலைகள் செய்தால் செல்வ வளம் கொழிக்கும்.

பக்தி இலக்கியத்தில் எருக்கை போற்றிய
பாடல்கள் வழிபாட்டுக்கு என உள்ளது

எருக்கத்தம்புலியூரில்
எருக்கு தான் ஸ்தல மரம் - போதுமா?

எருக்கு ஒதுக்கப்பட வேண்டியது அல்ல
எடுத்து வழிபட வேண்டியது.

# நஞ்சு அல்ல அமுது

அசாம் போன்ற மாநிலங்களில்
அங்கே பழங்குடி மக்கள் சடங்கில் உள்ளது எருக்கு

பஞ்ச பல்லவா என்ற வழிபாடு - நாம்
பார்த்து மகிழும் மராத்தியரிடம் உண்டு

இரத சப்தமி அன்று இங்கே
இந்துக்கள் எருக்கை வைத்து தான் வழிபடுகிறார்கள்.

சிவனுக்கு பூஜிக்க சிறந்த மலர் என
சிவமஞ்சரி சொல்கிறது.

மாந்தரீக பயன்பாட்டிலும்
மந்திர வழிபாட்டிலும் எருக்கே பிரதானம்.

சங்க காலத்திலும் இதற்கு
சரியாக எருக்கு என்றே பெயர் உள்ளது.

உயிர் காக்கும் மருந்து
உடல் ஆரோக்கியம் பேணும் எருக்கு.

இறைவழிபாட்டில் எருக்கு.
இயற்கை விவசாயத்தில் பூச்சி கொல்லி இதுவே.

நஞ்சு என ஒதுக்க வேண்டாம் எருக்கை.
“நஞ்சு அல்ல அமுது” என போற்றுவோம் இன்றே.

# ஆசிரியரின்

## மக்கள் மனம் க வர்ந்த பிற நூல்கள்.







இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,

அமேசான், விக்கிமீடியா, மின் நூலகம் மற்றும் ஆடியோ புத்தகமாக Channel G podcastல் கேட்கலாம்.

இந்த புத்தக கட்டமைப்புக்கு
பணம் தந்து உதவலாம்.
இது இன்னும் புத்தகம் வெளிவர
ஊக்கம் அளிக்கும்.

# நூலாசிரியர் பற்றி...

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம். இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்

